

# திருஅங்கமாலை

திருச்சிற்றம்பலம்

**அருளியவர் :** திருநாவுக்கரசர்

**திருமுறை :** நான்காம் திருமுறை

**பண் :** சாதாரி

**நாடு :** பொது

**தலம் :** பொது

**சிறப்பு:** திருஅங்கமாலை

திருச்சிற்றம்பலம்

தலையே நீவணங்காய் - தலை
  மாலை தலைக்கணிந்து
தலையா லேபலி தேருந் தலைவனைத்
  தலையே நீவணங்காய். 1

கண்காள் காண்மின்களோ - கடல்
  நஞ்சுண்ட கண்டன்றன்னை
எண்டோ ள் வீசிநின் றாடும் பிரான்றன்னைக்
  கண்காள் காண்மின்களோ. 2

செவிகாள் கேண்மின்களோ - சிவன்
  எம்மிறை செம்பவள
எரிபோல் மேனிப்பி ரான்றிறம் எப்போதுஞ்
  செவிகாள் கேண்மின்களோ. 3

மூக்கே நீமுரலாய் - முது
காடுறை முக்கணனை
வாக்கே நோக்கிய மங்கை மணாளனை
மூக்கே நீமுரலாய். 4

வாயே வாழ்த்துகண்டாய் - மத
யானை யுரிபோர்த்துப்
பேய்வாழ் காட்டகத் தாடும் பிரான்றன்னை
வாயே வாழ்த்துகண்டாய். 5

நெஞ்சே நீநினையாய் - நிமிர்
புன்சடை நின்மலனை
மஞ்சா டும்மலை மங்கை மணாளனை
நெஞ்சே நீநினையாய். 6

கைகாள் கூப்பித்தொழீர் - கடி
மாமலர் தூவிநின்று
பைவாய்ப் பாம்பரை யார்த்த பரமனைக்
கைகாள் கூப்பித்தொழீர். 7

ஆக்கை யாற்பயனென் - அரன்
கோயில் வலம்வந்து
பூக்கை யாலட்டிப் போற்றி யென்னாதவிவ்
வாக்கை யாற்பயனென். *8*

கால்க ளாற்பயனென் - கறைக்
கண்ட னுறைகோயில்
கோலக் கோபுரக் கோகர ணஞ்சூழாக்
கால்க ளாற்பயனென். *9*

உற்றா ராருளரோ - உயிர்
கொண்டு போம்பொழுது
குற்றா லத்துறை கூத்தனல் லால்நமக்
குற்றார் ஆருளரோ. *10*

இறுமாந் திருப்பன்கொலோ - ஈசன்
பல்கணத் தெண்ணப்பட்டுச்
சிறுமா னேந்திதன் சேவடிக் கீழ்ச்சென்றங்
கிறுமாந் திருப்பன்கொலோ. *11*

*தேடிக் கண்டுகொண்டேன் - திரு*

*மாலொடு நான்முகனுந்*

*தேடித் தேடொணாத் தேவனை என்னுளே*

*தேடிக் கண்டுகொண்டேன். 12*

*திருச்சிற்றம்பலம்*



